

# திருமுருகாற்றுப்படை

# உரைநடையும் குறிப்பும்

கழக வெளியீடு.

# திருமுருகாற்றுப்படை

## உரைநடையும் குறிப்பும்

※

உரைநடை, குறிப்பு ஆசிரியர்:
புலவர் இரா இளங்குமரன்

※

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்.
1/140, பிரகாசம் சாலை, சென்னை-1.
1977

இராமு இளங்குமரன் (1930)



கிளைகள் :

திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம்-1 திருச்சிராப்பள்ளி-2

கழக வெளியீடு : ௧௫௪௯

முதற்பதிப்பு : மார்ச் 1977



THIRUMURUKAARTRUPPADAI
(URAINADAIUM KURIPPUM)

திருவரங்கனார் அச்சகம், சென்னை-600 018 (I/2)

# பதிப்புரை

திருமுருகாற்றுப்படை என்னும் இந்நூல் மதுரைத் தமிழ்ச் சங்கத்துத் தலைமைப் புலவராய் விளங்கிய நக்கீரரால் இயற்றப் பெற்றது. ஆற்றுப்படை நூல்கள் எழுதுவது சங்ககாலத்தில் பெருவழக்காக இருந்தது.

சிறந்த மன்னன் அல்லது வள்ளலிடத்துப் புலவர்களை அல்லது இரவலர்களை வழிகாட்டி யனுப்புவது என்பதே ஆற்றுப் படை என்னும் தொடரின் பொருளாகும்.

திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப் படை, பெரும்பாணாற்றுப்படை என்பன பத்துப்பாட்டு என்னும் தொகையுள் காணப்படும் ஆற்றுப்படை நூல்களாகும். பத்துப் பாட்டுள் திருமுருகாற்றுப்படை என்னும் இந் நூல்மட்டுமே சமயச்சார்பு உடையதாய்த் 'திரு' என்னும் அடைமொழி சேர்த்துக் கூறப்படுகின்றது.

முருகப்பெருமானைக் காணவேண்டுமென்னும் பெருவேட்கை யோடு சென்ற ஒருவரை நோக்கி, முன்னரே முருகப் பெருமானிடம் அருள்பெற்று வந்த அடியார் ஒருவர் அக் கடவுள் இருக்கும் இடங்களைக் குறிப்பிட்டுக் கூறி வழிகாட்டி யனுப்புதல் என்பதே திருமுருகாற்றுப்படை என்னும் இத் தொடரின் பொருளாகும். முருகனிடத்து ஆற்றுப்படுத்துதல் என்பது பொருள். புலவராற்றுப்படை என்ற பெயரும் இந் நூலுக்கு உண்டு என அறிஞர் கூறுவர்.

நக்கீரர் சிவபூசை செய்தபோது மனம் வேறிடத்துச் சென்றமையால், 'ஒரு பூதத்தால் மலை முழையுள் அடைக்கப் பெற்றார். பின்னர் அவர் முருகப்பெருமான்மீது இப் பாடலைப் பாடி மனமுருகி வழிபட்டதனால் விடுதலை பெற்றார் என்னும் கதை வழங்குகின்றது.

முருகன் அருள்பெற விரும்புவோரும், இடையூறுகளினின்று விடுதலைபெற விரும்புவோரும் நாடோறும் இந் நூலைப் படித்து வழிபட்டு வருகின்றனர். ஆதலால் இந்நூலை உரைநடையோடும் அருஞ்சொற் பொருளோடும் வெளியிட்டால் அன்பர் பலரும் பொருளுணர்ந்து படித்து நன்மையடைவர்கள் எனக் கருதி இந் நூல் வெளியிடப்பெறுகின்றது.

கழகத்தின் விருப்பத்திற்கிணங்கி, செந்தமிழ்ச் சுவையும் முருகன் அருட்பேறும் நிறைந்த இந்த நூலுக்குச் சிறந்த உரை நடையும் அருஞ்சொற்பொருளும் சங்க நூற்புலமை சான்ற பெரும் புலவர் திரு. இரா. இளங்குமரன் அவர்கள் எழுதியுதவினார்கள். அவர்களுக்குக் கழகத்தின் நன்றியுரியதாகும்.

இந்த நூலினைத் தமிழ் அறிவும் முருகன் அருள்நலமும் பெற விரும்பும் அன்பர்கள் தாம் வாங்கிப் படிப்பதோடு தம் நண்பர் களுக்கு வாங்கிக் கொடுத்தும் பயனடையச் செய்வார்களாக. பள்ளி நூல்நிலையங்களும், பொது நூலகங்களும் இதனை வாங்கிவைத்து மாணவர்களும் தமிழ் மக்களும் பயனடையச் செய்ய வேண்டுகிறோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# திருமுருகாற்றுப்படை

## உரைநடையும் குறிப்பும்

---

### க. திருப்பரங்குன்றம்

(உரை நடை) உயிர்கள் மகிழ்வுற வேண்டும்; உலகம் ஒளி பெறவேண்டும்; இவற்றுக்காகக் கதிரோன் தோன்றுகின்றது; வலமாக அழகுடன் சுழல்கின்றது; அதனைக் கண்டவர்கள் அனைவரும் புகழ்ந்து பாராட்டுகின்றனர்; நீலக் கடல்மேல் சிவந்த ஞாயிறு விளங்குவதுபோல், நீலமயில்மேல் செவ்வேள் ஆகிய முருகன் விளங்குகிறன்.

முருகன், நீங்காத ஒளியினன்; எட்டாத் தொலைவிடத்திற்கும் விளக்கம் செய்யும் பேரொளி வடிவினன்; தன்னை அடைந்த அடியவர்களைத் தாங்குவதும், அவர்கள் ஆணவத்தை அழிப்பதுமாகிய திருவடிகளையுடையவன்; தன்னைப் பகைத்து வந்தோர் ஆற்றலை அழித்த இடியேறு போன்ற கொடிய கைகளையுடையவன்; களங்கமில்லாத கற்பையும், ஒளிமிக்க நெற்றியையும் உடைய தேவயானையின் கணவன். (1 - 6)

உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
ஓவற இமைக்கும் சேண்விளங் கவிரொளி
உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்தாள்
செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாள்நுதல் கணவன்

(குறிப்புரை) 1. வலன் ஏர்பு-வலமாக அழகுற; திரிதரு-சுழலுகின்ற; 2. ஞாயிறு-கதிரோன்; கண்டாஅங்கு-கண்டாற்போல.

3. ஓவு அற - ஒழிவு அற, நீங்காது ; இமைக்கும் - ஒளிவிடும் ; சேண் - தொலைவு ; அவிர்ஒளி - விளங்கும் ஒளி ; 4. உறுநர் - அடைந்தவர் ; மதன் உடை - மதத்தை உடைக்கும் ; நோன்தாள் - வலிய அடி ; 5. செறுநர் - பகைவர் ; செல்உறழ் - மேகம்போன்ற (இடிபோன்ற) ; தடக்கை - நெடியகை ; 6. மறு - களங்கம் ; வாள் நுதல் - ஒளிமிக்க நெற்றியையுடைய தேவயானை.

(உ - ரை.) மேகம் கடல் நீரை அள்ளிக்கொண்டு மேலே எழுகிறது; அது கருநிறங்கொண்டு வானில் பரவுகிறது; வாளை வீசினாற்போல மின்னுகிறது; வளமாக மழைத்துளிகளைச் சொரிகிறது; அது கார்காலத்தில் பெய்யும் முதன் மழையாகும். ஆதலால், காடுகளில் குளிர்ச்சியும் நறுமணமும் பரவுகின்றன. அக் காட்டில் பருத்த அடிகளையுடைய செங்கடம்பு மரங்கள் நெருங்கியிருக்கின்றன; ஆதலால், காடுமுழுவதும் காரிருள் கப்பிக்கொண்டுள்ளது. அக் கடம்பில் வட்டவடிவமான அழகிய பூக்கள் நிரம்பப் பூக்கின்றன. அப் பூக்களை எடுத்து மாலையாகத் தொடுக்கின்றனர்; முருகனுக்குச் சூட்டுகின்றனர்; முருகன் குளிர்ந்த கடம்பு மாலைபுரளும் மார்பினனாகக் காட்சி வழங்குகிறான். (7 - 11)

கார்கோள் முகந்த கமஞ்சூல் மாமழை
வாள்போழ் விசும்பின் வள்ளுறை சிதறித்
தலைப்பெயல் தலைஇய தண்ணறுங் கானத்து
இருள்படப் போதுளிய பராரை மராஅத்து
உருள்பூந் தண்டார் புரளும் மார்பினன்

(கு - ரை.) 7. கார்கோள் - மேகத்தால் அள்ளிக்கொள்ளப் பெறும் கடல் ; கமம் சூல் - நிறைந்த கருக்கொண்ட ; 8. போழ் - பிளத்தல் ; வள் உறை - வளமான மழைத்துளி ; 9. தலைப்பெயல் - முதன்மழை ; தலைஇய - பொழிந்த ; 10. பொதுளிய - மூடிக்கொண்ட; பராரை - (பரு+அரை) பருத்த அடி; மராம் - கடம்பு; 11. உருள்பூ - வட்ட வடிவமான பூ ;

(உ - ரை.) பெரிய மூங்கில்கள் உயர வளர்ந்து தோன்றும் மிக உயர்ந்த மலையில் கண்டாரை அச்சுறுத்தும் தெய்வப் பெண்கள் உளர்; அவர்கள், கிண்கிணி என்னும் சதங்கையைச் சூழ்க்கட்டிய ஒலி பொருந்திய சிவந்த சிறிய அடியினர்; திரண்ட காலினர்; வளைந்த இடுப்பினர்; பருத்த தோளினர்; இந்திரகோபம் (தம்பலப்

பூச்சி) போன்றதும், சாயம் தோய்க்கப் பெறாததும் பூ வேலைப் பாடுடையதும் ஆகிய உடையினர்; பலவகை மணிகளை ஒழுங்காகக் கோத்த சில வடங்களை அணிந்த அரையினர்; கையால் புனைந்து செய்யப்படாத இயற்கை அழகினர்; நாவல் என்னும் பெயருடைய சாம்பூநதம் என்னும் பொனனால் செய்யப்பட்ட ஒளியுடைய அணி கலன்களை அணிந்தவர்; நெடுந்தொலை கடந்தும் புகழ்விளங்கும் குற்றமற்ற உடலினர்; தோழியரால் ஆராயப்பெற்ற கலையழகுடன் கூடிய குளிர்ந்த கூந்தலினர்; (12 - 20)

மால்வரை நிவந்த சேணுயர் வெற்பிற்
கிண்கிணி கவைஇய ஒண்செஞ் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பிற் பணைத்தோள்
கோபத் தன்ன தோயாப் பூந்துகில்
பல்காசு நிரைத்த சில்காழ் அல்குல்
கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பின்
நாவலொடு பெயரிய பொலம்புனை அவிரிழைச்
சேணிகந்து விளங்கும் செயிர்தீர் மேனித்
துணையோர் ஆய்ந்த இணையீர் ஓதிச்

(கு-ரை) 12 *மால்வரை - பெரியமூங்கில்; நிவந்த - உயர்ந்த; வெற்பு - மலை; 13. கவைஇய - சூழ்ந்த; ஒண்செம் சிறுஅடி - ஒளி பொருந்திய சிவந்த சிறியஅடி; கணைக்கால் - திரண்டகால்; 14. வாங்கிய-வளைந்த; நுசுப்பு-இடை; பணை - பருத்த, மூங்கில்; 15. கோபம்- இந்திரகோபம் (தம்பலப் பூச்சி) தோயா - சாயம் தோய்க்கப் படாத; துகில் - ஆடை; 16. காசு - மணி. சில்காழ் - சிலவடம்; அல்குல்-அரை; 17. கவின்பெறுவனப்பு - இயற்கை வனப்பு; 18. நாவல் - சாம்பூநதம் என்னும் ஒருவகைப்பொன்; அவிர்இழை - ஒளியுடைய அணிகலம்; 19. சேண் இகந்து - தொலைகடந்து; செயிர் - குற்றம்; 20. துணையோர்- தோழியர்; இணை - கலையுடன் பொருந்திய; ஈர் - ஈரம்; ஓதி - கூந்தல்.*

(உ-டை.) *அத்தோழியர், சிவந்த அடியையுடைய வெட்சி மலரின் சிறிய இதழ்களின் இடையே, பசுமையான தண்டையுடைய குவளையின் தூய இதழைக்கிள்ளிக் கூந்தலில் இட்டனர்; தெய்வ வுத்தி எனப்படும் சீதேவி என்னும் அணியையும், சங்குவடிவாக அமைந்த வலம்புரி என்னும் அணியையும் அவற்றை வைத்தற்*

குரிய இடங்களில் தலைக்கோலமாக வைத்தனர்; திலகம் வைக்கப்பட்ட மணம் பரவுகின்ற அழகிய நெற்றியில், சுறாமீனின் பெரிய வாயின் வடிவாக அமைந்த அணியைப் படியுமாறு அணிவித்தனர்; செய்யும் ஒப்பனையை நிறைவாக முடித்த குற்றமற்ற கொண்டையில், பெரிய குளிர்ந்த சண்பகப் பூவைச்செருகினர்; கருந்தகடு போன்ற புறத்தையும் பஞ்சுபோன்ற அகத்தையும் உடைய மருதின் ஒளி பொருந்திய பூங்கொத்தை அச்சண்பகப் பூவின்மேல் இட்டனர்; ஆழமான நீரிலிருந்து பல கிளைகளுடன் அழகாக மேலெழுந்து விளங்கும் சிவந்த அரும்புகளைச் சேர்த்துக்கட்டிய மாலையைக், கொண்டையைச் சுற்றிக்கட்டினர்; இணையாக அமைந்த வளமான காதுகளில், நிறைந்த அசோகின் அழகிய தளிர்களை, நுண்ணிய வேலைப்பாடமைந்த அணிகலங்கள் விளங்கும் மார்பில் புரளுமாறு அணிந்தனர்; வலிய வயிரமுள்ள மணமிக்க சந்தனக் கட்டையை அரைத்து உண்டாக்கிய அழகிய நிறத்தையுடைய சந்தனக் குழம்பை, மணம்கமழும் மருதப்பூங்கொத்தை அப்பினாற்போலக் கோங்கின் அரும்புபோலக் குவிந்த இளமையான தனங்களின்மேல் அப்பினர்; வேங்கையின் விரிந்தமலரில் இருந்து எடுத்த மகரந்தப் பொடியை அச்சந்தனக் குழம்பின்மேல் அப்பி மேலும் அழகுபெறச் செய்தனர். (21 - 36)

செங்கால் வெட்சிச் சீறிதழ் இடையிடுபு
பைந்தாள் குவளைத் தூவிதழ் கிள்ளித்
தெய்வ உத்தியோடு வலம்புரி வயின்வைத்துத்
திலகம் தைஇய தேங்கமழ் திருநுதல்
மகரப் பகுவாய் தாழ மண்ணுறுத்துத்
துவர முடித்த துகளறு முச்சிப்
பெருந்தண் சண்பகம் செரீஇக் கருந்தகட்டு
உளைப்பூ மருதின் ஒள்ளிணர் அட்டிக்
கிளைக்கவின் றெழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்பு
இணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக
வண்காது நிறைந்த பிண்டி ஒண்தளிர்
நுண்பூண் ஆகம் திளைப்பத் திண்காழ்

நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
குவிமுகிழ் இளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண்தா தப்பிக் காண்வர

(கு - ரை.) 21. செங்கால் - சிவந்த அடி ; சிறுதழ் - சிறுஇதழ் ; இடைஇடுபு - இடை இடையே இட்டு ; 23. தெய்வஉத்தி - சீதேவி என்னும் தலையணி ; வலம்புரி - சங்குவடிவில்செய்த தலையணி ; வயின்- இடம் ; 24. வைஇய - வைக்கப்பெற்ற ; தேம் - இனிய மணம் : 25. மகரம் - சுறாமீன் ; பகுவாய்-பிளந்தவாய் ; மண்ணுறுத்தி- அணிவித்து ; துவர - முடிய; துகள் - குற்றம்; முச்சி - உச்சி ; 28. உளை- வெண்ணிறத் துய்; ஒள் இணர் - ஒளிபொருந்திய கொத்து; 29. கீழ்நீர்- ஆழமான நீர் : 30. இணைப்புறுபிணையல்-இரண்டுமாலைகளைச் சேர்த்துக் கட்டிய பிணையல் மாலை ; தணைத்தக - ஒன்றற்கொன்று ஒப்பாக ; 31. பிண்டி - அசோகு ; 32. ஆகம் - மார்பு ; காழ் - வயிரம் ; 33. குறடு - கட்டை ; கேழ் - நிறம் ; தேய்வை - சந்தனம் ; 34. இணர் - பூங்கொத்து ; கடுப்ப - போல ; 36. தாது - மகரந்தப் பொடி ; காண்வர - காட்சியின்பம் பெற.

(உ - ரை) இவ்வாறு ஒப்பனை செய்யப்பட்ட தெய்வமகளிர் விளாவின் இளந்தளிரைக் கிள்ளி ஒருவர்மேல் ஒருவர் எறிந்து விளையாடினர் ; "பகையை வென்று அழிக்கும் வீரமிக்க உயர்ந்த கோழிக்கொடி நெடிது வாழ்க" என வாழ்த்தினர்; அவர்கள் கூடிச் சேர்ந்து சிறப்புமிக்கமலை எதிரொலி செய்யுமாறு உரக்கப்பாடினர் ; ஆடினர் ; அவர்கள் ஆடிய சோலையைச் சார்ந்தது, பக்க மலைகளையுடையதொரு பெருமலை அது, குரங்கும் ஏறி அறிய மாட்டாத நெடிதுயர்ந்த மரங்களை நிறையக் கொண்டிருந்தது. அதில் மலர்ந்து வண்டு மொய்யாததாய், நெருப்புப் போன்ற நிறத்தை உடையதாய் அமைந்த காந்தள் பூவினால் தொடுத்த மிகக்குளிர்ந்த மாலையைச் சூடிய திருமுடியுடையவன் திருமுருகன் ; அவன் நிலத்துக்கு முற்பட்டதாகிய குளிர்ந்த கடல் கலங்குமாறு உள்ளேபுகுந்து சூரனாகிய தலைவனைக் கொன்ற ஒளியுடைய இலைவடிவ நெடிய வேலையுடையவன் ; (37 - 46)

வெள்ளில் குறுமுறி கிள்ளுபு தெறியாக்
கோழி ஓங்கிய வென்றடு விறற்கொடி

வாழிய பெரிதேன் றேத்திப் பலருடன்
சீர்திகழ் சிலம்பகம் சிலம்பப் பாடிச்
சூர்அர மகளிர் ஆடும் சோலை
மந்தியும் அறியா மரம்பயில் அடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்
பார்முதிர் பனிக்கடல் கலங்கஉள் புக்குச்
சூர்முதல் தடிந்த சுடரிலை நெடுவேல்

(கு - ரை.) 37. வெள்ளில் - விளா ; குறுமுறி - இளந்தளிர் ; 38. விறல் - வலிமை ; 40. சிலம்பகம் - மலையிடம்; சிலம்ப - ஒலிக்க; சூர் அரமகளிர் - அச்சுறுத்தும் தெய்வப்பெண்கள் ; 42. மரம்பயில் - மரம்செறிந்த : அடுக்கம் - மலைப்பக்கம் ; 43. சுரும்பு - வண்டு ; மூசா-மொய்யாத ; 44. கண்ணி - தலையில் அணியும்மாலை ; சென்னி-தலை ; பார்முதிர் - நிலத்துக்குமுந்திய ; 45. பனி - குளிர்ந்த ; 46. சூர்முதல் - அசுரர் தலைவனாகிய சூரபன்மன் ; தடிந்த - கொன்ற ; இலை - இலைவடிவம்.

(உ - டை.) அவ்வேலால் அவன், சூரபன்மானைப் பேய்மகள் கூத்தாடுமாறு அழித்தவன். அப்பேய்மகள், காய்ந்த தலையினள்; வரிசை பொருந்தாத பல்லினள் ; பெரிய வாயினள் ; சுழலும் விழியினள்; பசுமையான கண்ணினள்; அச்சுறுத்தும் பார்வையள்; வெளியே பிதுங்கிய கண்ணையுடைய கூகையும, கொடிய பாம்பும் தூங்குவதும், பெரிய மார்புகளை வருத்துவது மாகிய காதினள்; பருத்த வயிற்றினள் ; விரைந்த நடையால் அச்சம் செய்பவள் ; அவள் இரத்தம் தோய்ந்த கூரிய நகத்தையுடைய கொடியவிரலால் கண்ணைத் தோண்டி உண்ட மிகுந்த நாற்றமுடைய பருத்த தலையை, ஒளிபொருந்திய வளைமல் அணிந்த பெரிய கையில் ஏந்தியவள் ; பகைவர் அஞ்சுமாறு வெற்றிகொண்ட சிறந்த போர்க்களத்தைப் பாடித் தோளை அசைத்து ஆட்டிக்கொண்டு, தசையைத் தின்னும்வாயினள் ; அவள் இருகைகளையும் முடக்கி அடித்து ஆடும் துணங்கை என்னும் கூத்தைக் களிபபால் ஆடினள். (47 - 56)

உலறிய கதுப்பிற் பிறழ்பற் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கண் சூர்த்த நோக்கிற்

கழல்கண் கூகையோடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை அலைக்கும் காதில் பிணர்மோட்டு
உருகெழு செலவின் அஞ்சுவரு பேய்மகள்
குருதி யாடிய கூருகிர்க் கொடுவிரல்
கண்தோட் டுண்ட கழிமுடைக் கருந்தலை
ஒண்தொடித் தடக்கையின் ஏந்தி வெருவர
வென்றடு விறற்களம் பாடித் தோள்பெயரா
நிணந்தின் வயள் துணங்கை தூங்க

(கு - ரை.) *47. உலறிய - காய்ந்த ; கதுப்பு - கூந்தல்; பிறழ்பல் - வரிசை பொருந்ாதபல். பேழ்வாய் - பெரியவாய் ; 48. சூர்த்த - அச்சுறுத்த ; 50. பிணர்மோட்டு - பெரியவயிற்று ; 51. உருகெழு - ஒளிபொருந்திய, அச்சுறுத்தும் ; 52. கூர்உகிர் - கூர்மையான நகம் ; கொடுவிரல் - வளைந்தவிரல் ; 53. தொட்டு - தோண்டி; கழிமுடை - பெருநாற்றம் ; கருந்தலை - பெரியதலை ; 54. தொடி - வளையல் ; தடக்கை - பெரியகை ; வெருவர - அஞ்ச ; 56. நிணம் - தசை ; துணங்கை - ஒருவகைக் கூத்து, அஃது இருகைகளையும் முடக்கிஅடித்து ஆடுவது.*

(உ - டை.) *இவ்வாறு, பேய்மகள் துணங்கைக் கூத்துஆட இரண்டு பெரிய உருவத்தைக் கொண்ட ஒருபெரிய சூரபன்மாவின் உடல், பல்வேறு கூறுபட அறுந்து போகுமாறு அவன் அஞ்ச நெருங்கினான் முருகன் ; அசுரர்களின் நல்ல வீரத்திறங்களெல்லாம் ஒருங்கே அழியுமாறு கீழ்நோக்கிய பூங்கொத்துகளையுடைய மாமர வடிவாகிய சூரபன்மனை அழித்தான் ; குற்றமில்லாத வெற்றி பெற்றான் ; என்றும்குறையாப் பெரும்புகழ் பெற்றான் ; சிவந்த வேற்படையுடைய செவ்வேளாகிய முருகன்.* (57 - 61)

இருபேர் உருவின் ஒருபேர் யாக்கை
அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி
அவுணர் நல்வலம் அடங்கக் கவிழிணர்
மாமுதல் தடிந்த மறுவில் கொற்றத்து
எய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்

(கு - ரை) *57. இருபேர் உருவு - இரண்டு பெரிய உருவம். அவை, சூரன், பதுமன் என்னும் இருவர்க்குரியன, குதிரைமுகமும்*

மக்கள் உடலும் ஆயது. 58. அறுவேறுவகை - பலவாக அறுபட்டுப் போகுமாறு ; மண்டி - நெருங்கி ; 59. அவுணர் - அசுரர் ; வலம் - வலிமை; 60. மாமுதல்-மாமரம் ; அவ்வடிவினன் சூரபன்மா; தடிந்த- அழித்த ; 61. எய்யா - குறையாத; இசை - புகழ்; சேஎய் - செய் யோன் ஆகிய முருகன்.

(உ - ரை.) இனிய புலவனே, செவ்வேல் முருகனின் சிவந்த திருவடிகளை வணங்கும் எழுச்சிமிக்க உள்ளத்துடன் நல்லறங்களை விரும்பிச் செய்யும் கொள்கையால், அப்பெருமான் விரும்பி உறை யும் இடங்களுக்குச் செல்லுதலை நீ விரும்புவையானால், நின் நெஞ்சத்திலுள்ள இனிய விருப்பம் நிறைவேறுவதுடன், நீ எண்ணிய நல்வினைப்பயனையும் இப்பொழுதே பெறுவாய்.

(62 - 66)

சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையும்
செலவுநீ நயந்தனை யாயிற் பலவுடன்
நன்னர் நெஞ்சத் தின்னசை வாய்ப்ப
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே.

(கு - ரை.) 62. சேவடி - செம்மை+அடி ; படரும் - வழிபடும் ; செம்மல் உள்ளம் - எழுச்சி வாய்ந்த உள்ளம் ; 63. புலம் புரிந்து உறையும் - விரும்பி உறையும்இடம் ; 65. இன்னசை - இனிய விருப்பம் ; 66. முன்னிய - எண்ணிய; வினை - நல்வினை.

(உ - ரை.) இனிய புலவனே, நீ சென்று செவ்வேளை வழிபடத்தக்க இடங்களை இயம்புவேன் கேட்பாயாக :

போர் செய்தற்குப் பகைவர்களை அழைக்கு முகத்தால் கட்டப் பெற்ற மிக உயர்ந்த புகழ்மிக்க கொடியை அடுத்து, நூலால் வரிந்து கட்டப்பட்ட பந்துடன் பாவையும் தொங்கும் ; அப் பாவை யும் பந்தும் பகைவர் ஆண்மையை இகழும் வகையால் தூக்கப் பெற்றனவாகும். அவற்றை அவர்கள் அறுத்தெறிந்து போசப் புரிதற்குத் துணிந்து வாராமையால், போர் அற்றுப்போன வாயிலை உடையது ; திருமகள் வீற்றிருப்பதும், குற்றமற்றதும் ஆகிய

கடைத்தெருக்கள் மிகுந்தது; மாடங்கள் நிறைந்த தெருக்களையுடையது; இத்தகைய கூடல்மாநகராகிய மதுரையின் மேற்குத் திசையில் மிகுந்த சேறுகளையுடைய அகன்ற வயல்கள் உள்ளன. அவ்வயல்களில் விரிந்து மலர்ந்ததும், முள்ளைத் தண்டில் உடையதுமாகிய தாமரைகள் நிரம்பியுள்ளன. அத்தாமரை மலருள் அழகிய சிறகுகளையுடைய வண்டினது அழகிய கூட்டங்கள் இரவுப் பொழுதில் உறங்கும்; விடியற்பொழுதில், தேன் ஒழுகும் நெய்தல் பூவில் பொருந்தித் தேன்கொள்ளும்; கதிரோன வெளிப்பட்ட பொழுதில், கண்ணைப்போல் மலர்ந்த அழகிய சுனைப் பூக்களில் ஆரவாரிக்கும். இத்தகைய மருதவளம் வாய்ந்தது திருப்பரங்குன்றம். ஆங்குத் திருமுருகன் திருவுள்ளம் பொருந்தித் தங்குதல் உரியன். (67 - 77)

செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போரரு வாயில்
திருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடமலி மறுகிற் கூடற் குடவயின்
இருஞ்சேற் றகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த
முள்தாள் தாமரைத் துஞ்சி வைகறைக்
கள்கமழ் நெய்தல் ஊதி எற்படக்
கண்போல் மலர்ந்த காமர் சுனைமலர்
அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
குன்றமர்ந் துறைதலும் உரியன்; அதாஅன்று

(கு - ரை.) 67. செருப்புகன்று - போர்க்கு அறைகூவி; 68. வரிப்புனைபந்து - வரிந்து கட்டப்பெற்றபந்து; பாவை - பெண் வடிவாகிய பதுமை; பொருநர் - போர் செய்வார்; 69. போர் அருவாயில் - போர் அரிதாகிய (இல்லையாகிய) வாயில்; 70. திருவீற்றிருந்த - அழகு கொழிக்கும்; திருமகள் தங்கிய; நியமம் - கடைத்தெரு; 71. மலி - மிகுந்த; மறுகு - தெரு; குடவயின் - மேற்கில்; 72. வாய் அவிழ்ந்து - மலர்ந்து; 73. தாள் - அடி; துஞ்சி - உறங்கி; 74. கள் - தேன்; நெய்தல் - குவளை; எற்பட - கதிரோன் எழ; 75. காமர் -

அழகிய ; 76. அம்சிறை - அழகியசிறகு, உள்ளொடுங்கிய சிறகு (அகம் சிறகு) ; அரிக்கணம் - அழகிய கூட்டம் ;

அதுவன்றியும் கேட்பாயாக :

## உ. திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்)

(உ - டை.) கூர்மையான நுனி அமைந்த தோட்டி (அங்குசம்) அழுத்துதலால் ஆழமான தழும்பு தோன்றுவதும், புள்ளிகள் நிரம்பிய நெற்றிப்பள்ளத்தில் அணிந்த பட்டத்துடன் வாடாத பொன்மாலை கிடந்து அசைவதும், பெரியமணிகள் இருபுறங்களிலும் தொங்கிப் பேரொலி செய்வதும், கடிய நடையுடைய கூற்றுவனை போன்றதாய் எவராலும் விலக்குதற்கு அரிய வலிமையுடையதும், காற்றுக் கிளர்ந்து எழுந்தாற்போன்ற செலவுடையதும் ஆகிய யானையின் மேலே திருமுருகன் அமர்ந்துள்ளான்.

ஐந்து வேறுவகைச் செயல் திறமையால் முடிக்கப்பெற்ற அவன் திருமுடியின்மீது, ஒன்றை ஒன்று விஞ்சுவதாய்ப் பன்னிற ஒளிசெய்யும் அழகிய மணிகள் மின்னல் போன்ற ஒளியால் தலைக்குப் பொலிவு தருகின்றன.

ஒளி தங்கி அசையும் வேலைப்பாடமைந்த பொன்னால் செய்யப் பட்ட மகர குண்டலங்கள், மிகத் தொலைவிடத்தே விளங்கும் இயல்புடைய ஒளிமிக்க முழுமதியைச் சூழ்ந்து அகலாது விளங்கும் விண்மீன்கள் போல ஒளியுடையனவாய்த் திகழ்கின்றன.

குற்றமற்ற உயர்ந்த கொள்கைகளை யுடையவர்களாய்த் தம் தவத்தொழிலை முடிக்கும் பெரியவர்கள் உள்ளத்தில் அழகுறத் தோன்றுகின்ற ஒளிமிக்க ஆறு திருமுகங்களையுடையவன் அவன்.
(78 - 90)

வைந்நுதி பொருத வடுவாழ் வரிநுதல்
வாடா மாலை ஓடையொடு துயல்வரப்
படுமணி இரட்டும் மருங்கில் கடுநடைக்
கூற்றத் தன்ன மாற்றரும் மொய்ம்பிற்

கால்கிளர்ந் தன்ன வேழமேல் கொண்டு
ஐவேறு உருவில் செய்வினை முற்றிய
முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி
மின்னுறழ் இமைப்பில் சென்னிப் பொற்ப
நகைதாழ்பு துயல்வரூஉம் வகையமை பொலங்குழை
சேண்விளங் கியற்கை வாண்மதி கவைஇ
அகலா மீனின் அவிர்வன இமைப்பத்
தாவில் கொள்கைத் தம்தொழில் முடிமார்
மனனேர் பெழுதரு வாள்நிற முகனே

(கு - ரை.) 77 அதாஅன்று - அதுவன்றி; 78. வைநுதி - கூர்மையான நுனி; பொருத-அழுத்திய; வடு ஆழ்-தழும்பு ஆழ்ந்த; நுதல்-நெற்றி; 79. ஓடை - நெற்றிப்பள்ளம்; துயல்வர-அசைய; 80. படுமணி - பெரியமணி; இரட்டும் - ஒலிக்கும்; மருங்கு-பக்கம்; மொய்ம்பு - வலிமை; 82. கால் - காற்று; வேழம் - யானை; 83. 'ஐவேறு...முடி' - தாமம், மகுடம், பதுமம். கிம்புரி, கேடகம் என்னும் ஐந்துவகை வினைத்திறம்; 84. முரண் - ஒன்றை ஒன்று விஞ்சிய; 85. பொற்ப - பொலிவுதர; 86. நகை - ஒளி; துயல் வரூஉம் - அசையும்; பொலங்குழை - அழகியகாதணி; 87. வாண் மதி - முழுமதி; கவைஇ - சூழ்ந்து; 88. அவிர்வன இமைப்ப - விளங்கி ஒளிவிட; 89. தாவுஇல் - அழிவில்லாத; 90. ஏர்பு எழுதரு - அழகாக எழும்; வாள் - ஒளி;

(உ - ரை.) அத் திருமுகங்களுள் ஒருமுகம், காரிருள் கப்பிக் கொண்ட உலகம் குற்றமின்றி விளங்குமாறு ஞாயிறு, திங்கள், விண்மீன் முதலிய பலகதிர்களை விரிக்கும்;

ஒருமுகம், தன்மேல் விருப்புடைய அடியார் வாழ்த்த விரும்பி அமைந்து இனிதுற நடந்து அவர்கள் வேண்டும் வரங்களை அன்பால் வழங்கும;

ஒருமுகம், மந்திரம் கூறும் மறைநூல்களின் விதிமுறை தவறாத ஒழுக்கமுடைய அந்தணர்கள் செய்யும் வேள்விகளுக்குத் தீமை வாராதபடி பார்க்கும்;

ஒருமுகம், நூலறிவால் காணமுடியாத நுண்பொருள்களை இன்புற ஆராய்ந்து ஒளிநிரம்பிய முழுமதிபோல எல்லாத் திசைகளையும விளக்கும்.

ஒருமுகம், இயல்பாகச் செல்லும் நடுவு நிலைமையைக்கெடுத்து' இவர்களைக் கொல்லவேண்டும் என்று சினங்கொண்ட உள்ளத்தோடு அழித்தற்குரிய பகையை அழித்துப் போர்க்களவேள்வி செய்யும்.

ஒருமுகம், மலைவாணர்தம் இனியமகளும் கொடிபோன்ற இடையுடையவளும் ஆகிய மெல்லியல் வள்ளியொடு மகிழ்வுகூரும்.

(90 - 102)

மாயிருள் ஞாலம் மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன் றொருமுகம் ஒருமுகம்
ஆர்வலர் ஏத்த அமர்ந்தினி தொழுகிக்
காதலின் உவந்து வரங்கொடுத் தன்றே;
ஒருமுகம்,
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வியோர்க் கும்மே; ஒருமுகம்,
எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித்
திங்கள் போலத் திசைவிளக் கும்மே;
ஒருமுகம்,
செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்
கறுவுகொள் நெஞ்சமொடு களம்வேட் டன்றே;
ஒருமுகம்,
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே;

(கு - ரை.) *91.* மாயிருள் - பேரிருள்; ஞாலம் - உலகம்; *92.* ஆர்வலர்-அன்பர்; அமர்ந்து - விரும்பி; *95.* வழாஅ - தவறாது; *96.* ஓர்க்கும் - ஆய்ந்து பார்க்கும்; *97.* ஏமுற - இன்புற; நாடி - ஆராய்ந்து; *99.* செல்சமம் - செல்லும் நடுவுநிலை; *100.* கறுவு - சினம்; *101.* நுசுப்பு - இடை; *102.* மடவரல் - பெண்; நகை - மகிழ்வு;

(உ - ரை.) அவ் ஆறுமுகங்களும் அம்முறையில் தம்தம் தொழில்களைத் தொடர்ந்து செம்மையாகச் செய்யும். அம் முகங்களுக்கு ஏற்றவாறு செம்பொன்மாலை அணிந்த அழகிய பெரிய மார்பிலே உயர்ந்த இலக்கணமுடைய சிவந்த மூன்று வரிகள் பொருந்திய தோள்கள் அமைந்துள்ளன ; அவை, சுடர்மிக்கன ; தம் வலிமையினால் புகழ்வாய்ந்தன ; படைக்கலங்களை ஏவிப் பகைவர் மார்புகளைப் பிளந்து மீண்டும் அவற்றை வாங்கி நிமிர்வன ;

அக் கைகளுள் ஒருகை, வானில்செல்லும் முறைமையுடைய முனிவர்க்குப் பாதுகாவலாக அமையும் ; அதற்கு இணையான ஒருகை, இடுப்பில் இருக்கும் ;

ஒருகை, நன்மையமைந்த செந்நிற உடையுடுத்த துடையின் மேல் வைக்கப்பெற்றிக்கும் ; அதற்கு இணையான ஒருகை, தோட்டி என்னும் அங்குசத்தை எடுத்து யானையைச் செலுத்தும் ;

இரண்டுகைகள், அழகிய பெரிய கேடயத்துடன், வேற்படையை வலமாகச் சுழற்றும் ;

ஒருகை, மார்பின்மேல் பொருந்தியிருந்து மெய்ப்பொருள் உணர்த்தும் ; அதற்கு இணையான ஒருகை மார்பில் புரளும் மாலையைப் பற்றியிருக்கும் ;

ஒருகை, இழித்து எடுக்கப்பெற்ற விரும்பத்தக்க வளையலோடு சுழலும் ; அதற்கு இணையான ஒருகை இனிமையாக ஒலிக்கும் பெரிய மணியை அறையும் ;

ஒருகை நீலநிறவானில் நிறைந்த மழையைப் பொழியச் செய்யும் ; அதற்கு இணையான ஒருகை, வானுலகிலுள்ள தெய்வ மகளிர்க்கு மணமாலை சூட்டும் ; இவ்வாறு அப் பன்னிரு கைகளும் தம்தம் முகங்களுக்குத் தக்க தொழில்களைச் செய்யும். (103 - 118)

ஆங்கம்,

மூவிரு முகனும் முறைநவின் றொழுகலின்
ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பில்
செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடு

வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்
விண்செலன் மரபின் ஐயர்க் கேந்திய
தொருகை; உக்கம் சேர்த்திய தொருகை;
நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை யசைஇய
தொருகை,
அங்குசம் கடாவ ஒருகை ; இருகை
ஐயிரு வட்டமொ டெஃகுவலந் திரிப்ப;
ஒருகை, மார்போடு விளங்க;
ஒருகை, தாரொடு பொலிய ; ஒருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப ;
ஒருகை,
பாடின் படுமணி இரட்ட ஒருகை
நீனிற விசும்பின் மலிதுளி பொழிய ;
ஒருகை,
வானர மகளிர்க்கு வதுவை சூட்ட,
ஆங்கப்,
பன்னிரு கையும் பாற்பட இயற்றி.

(கு - ரை.) 103. நவின்றுஒழுகல் - தொடர்ந்துசெய்தல் ; 104. ஆரம் - மாலை ; பகட்டு மார்பு - பெரிய (அகன்ற) மார்பு ; 105. பொறி - வரி ; வாங்கிய - வளைந்த ; சுடர்விடுபு - சுடர்விட்டு; 106. வசிந்து வாங்கு - ஏவி வாங்கும் ; 107. ஐயர் - முனிவர், தேவருமாம் ; 108. உக்கம் - இடுப்பு ; 109. கலிங்கம் - உடை ; குறங்கு - தொடை, அசைஇய - தங்கிய ; 110. ஐஇரு - அழகிய பெரிய ; 111. வட்டம் - கேடயம் : எஃகு-வேல் ; 114. கொட்ப - சுழல ; 115. பாடின் பருமணி - இனிதாக ஒலிக்கும் பெரியமணி ; இரட்ட - ஒலிப்பிக்க, 116. நீனிறம - நீல நிறம் ; 117. வதுவை - மணமாலை ; 118. பாற்பட - தம் பகுதிக்குத்தக.

(உ - ரை.) இவ்வாறு பன்னிரு கைகளும் தம்தம் தொழில் களைச் செய்யவும், வானத்தில் பல இசைக் கருவிகளும் ஒலிக்கவும், வலிய வயிரம்கொண்ட ஊது கொம்புகள் ஓங்கி ஒலிக்கவும், வெண் சங்கங்கள் முழக்கவும், வலிமைவாய்ந்த இடிபோன்ற முரசங்கள்

ஆர்க்கவும் வண்ணத் தோகைகளையுடைய மயில் வெற்றிக் கொடி மேல் இருந்து கூவவும், வானமே வழியாக விரைந்து செல்லு தலைக்கருதி உயர்ந்தோரால் புகழப்பட்ட மிகவும் சிறந்த பெருமை வாய்ந்த திருச் 'செந்தில் மாநகரில் எழுந்தருளுதலும் திரு முருகனின் நிலைத்த தன்மையே யாம். (119 - 125)

அந்தரப் பல்லியம் கறங்கத் திண்காழ்
வயிர்எழுந் திசைப்ப வால்வளை ஞரல
உரம்தலைக் கொண்ட உரும்இடி முரசமொடு
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி அகவ
விசும்பா றாக விரைசெலல் முன்னி
உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர்
அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே ;

(கு - ரை.) 116. பல்லியம் - பலஇசைக் கருவிகள் ; கறங்க - ஒலிக்க ; காழ் - வயிரம் ; 120. வயிர் - ஊதுகொம்பு ; வால்வளை ஞரல-வெண்சங்கம் ஒலிக்க; 122. பொறி - புள்ளி, தோகை; மஞ்ஞை- மயில் ; 123. ஆறுஆக-வழியாக; முன்னி-நினைத்து ; 124. விழுச்சீர்- சிறந்த பெருமை ; 125. அலைவாய் - திருச்சீரலைவாய் என்னும் திருச்செந்தூர் ; சேறல் - செல்லுதல்; நிலைஇய-நிலைத்த.

அதுவன்றியும் கேட்பாயாக :

## ௩. திருவாவிநன்குடி

(உ - டை) மரவுரியைச் சேர்த்துத் தைத்த உடையினர் ; அழகொடுவலம்புரிச் சங்கு போன்ற தூய நரைமுடியினர்; மாசின்றி விளங்கும் வடிவினர் ; மான்தோல் போர்வையினர் ; தசைமெலிந்து மேலே எலும்பு எழும்பி உலாவும் உடலினர் ; நல்ல பல பகற் பொழுதுகளை விலக்கி, அரிதாக உண்பவர் ; மாறுபாட்டுடன் சினமும் நீக்கிய மனத்தினர் ; கற்கவேண்டும் நூல்களையெல்லாம் கற்றவராலும் அறியப்பெறாத அறிவினர்; கற்றவர்களுக்குத் தாமே எல்லையாக அமைந்த தலைமையினர் ; ஆசையும் கடுங்கோபமும் அகற்றிய நல்லறிவினர் ; துன்பம் என்பது சிறிதும் அறியாத

தன்மையர் ; எவரொடும் பொருந்திய வெறுப்பில்லாத மெய் யுணர்வினர் ; இத்தகைய முனிவர்கள் விரும்பி முன்னே செல்லுவர். (126 - 137)

அதாஅன்று,
சீரை தைஇய உடுக்கையர்; சீரொடு
வலம்புரி புரையும் வால்நரை முடியினர் ;
மாசற இமைக்கும் உருவினர்; மானின்
உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்
என்பெழுந் தியங்கும் யாக்கையர்; நன்பகல்
பலவுடன் கழிந்த உண்டியர்; இகலொடு
செற்றம் நீக்கிய மனத்தினர்; யாவதும்
கற்றோர் அறியா அறிவினர்; கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர்; காமமொடு
கடுஞ்சினம் கடிந்த காட்சியர்; இடும்பை
யாவதும் அறியா இயல்பினர்; மேவரத்
துனியில் காட்சி முனிவர் முன்புகப்

(கு - ரை.) *126. சீரை தைஇய-மரவுரி உடுத்த ; 127.* வலம்புரி *புரையும் - சங்குபோன்ற; வால்நரை - தூயநரை; 128.* இமைக்கும்- *விளங்கும் ; உரிவை - தோல்; 129. ஊன்கெடு - தசைமெலிந்த ; 130. என்பு - எலும்பு ; யாக்கையர் - உடலினர் ; 131.* இகல் *மாறுபாடு ; 132. செற்றம் - கோபம் ; 134. வரம்பு - எல்லை ; 135. காட்சியர்-அறிவினர் ; 136. மேவர - பொருந்த; 137. துனி- வெறுப்பு ;*

(உ - ரை.) *புகையை அள்ளிக் கொண்டாற்போன்ற அழுக்கில்லாத தூயவுடையும், மொக்கு விரிந்த மலரால் தொடுக்கப் பட்ட மாலையணிந்த மார்பும், செவியால் அளவிட்டு அமைத்துச் செம்மையான அளவில் கட்டிய வார்க்கட்டுடைய நல்ல யாழில் பயின்ற நல்ல நெஞ்சும், மெல்லிய மொழியையே மொழியும் இயல்பும் படைத்த கந்தருவர் இனிய யாழ் நரம்பை மீட்டுவர் ;*

*நோயில்லாத நல்ல உடலினரும், மாவின் விளங்கும் தளிர் போன்ற நிறத்தினரும், விளங்கும் பொழுதெல்லாம் பொன்*

உரைத்தால் போல விளங்கும் தேமலினரும், இனிய ஒளியமைந்த பதினெண் கோவையாகிய மேகலையை அணிந்த உயர்ந்து தாழ்ந்த அரையினரும் ஆகிய குற்றமில்லாத கந்தருவமகளிர் அக் கந்தருவருடன் பொலிவாக விளங்குவர். (138 - 147)

புகைமுகந் தன்ன மாசில் தூவுடை
முகைவாய் அவிழ்ந்த தகைசூழ் ஆகத்துச்
செவிநேர்பு வைத்த செய்வுறு திவவின்
நல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்
மென்மொழி மேவலர் இன்னரம் புளர
நோயின் றியன்ற யாக்கையர் மாவின்
அவிர்தளிர் புரையும் மேனியர் அவிர்தொறும்
பொன்னுரை கடுக்கும் திதலையர் இன்னகைப்
பருமம் தாங்கிய பணிந்தேந் தல்குல்
மாசில் மகளிரோடு மறுவின்றி விளங்கக்

(கு - ரை.) 139. முகை - மொட்டு; வாய் அவிழ்ந்த - மலர்ந்த ; தகை - மாலை ; ஆகம் - மார்பு ; 140. செவிநேர்பு - செவியால் அளந்து ; திவவு - வார்க்கட்டு ; 142. மேவலர் - விருப்பினர் ; இன் நரம்பு உளர - இனிய யாழை இசைக்க ; 144 புரையும் - போன்ற ; அவிர் தொறும் - விளங்கும் பொழுதுதொறும் ; 145. பொன்னுரை கடுக்கும் - பொன்னைத் தேய்த்தது போன்ற ; திதலை - தேமல் ; 146. பருமம் - மேகலை; பணிந்து ஏந்து - தாழ்ந்து உயர்ந்து ;

(உ - டை.) மேலும், நஞ்சுடன் தங்கிய துளையுடைய வெண்ணிறப் பல்லையும், தீயெனப் பெருமூச்சுவிட்டுக் கண்டார்க்கு அச்சம் உண்டாக்கத்தக்க கடுங்கோபத்தையும் உடைய பாம்பு அழிந்துபடுமாறு அடிக்கும், பல வரிகளையும், வளைந்த சிறகுகளையும் உடைய கருடனை அழகிய நெடிய கொடியாகக் கொண்ட திருமால்,

வெண்ணிறக் காளையை வெற்றிக் களத்தில் உயர்த்திப் பிடித்த, பலரும் புகழும் வலிய தோளையும், உமையம்மை விரும்பி விளங்கும் பக்கத்தையும், இமைத்தல் இல்லாத மூன்று கண்

*களையும் உடைய, பகைவர் மும்மதில்களையும் அழித்த வலிமை வாய்ந்த சிவபெருமான்,*

*ஆயிரம் கண்களையும், நூறாகிய பல வேள்விகளைச் செய்து முடித்த வெற்றியால் கொண்ட பெருமையையும் உடையவனும், உயர்ந்த நான்கு தந்தங்களைக் கொண்டதும், அழகிய நடையினதும், நிலந்தொடத் தாழ்ந்து வளைந்த நெடுங்கையை உடையதுமாகிய வெள்ளையானையின் பிடரில் ஏறி இருந்து அழகுடன் உலா வருபவனாகிய இந்திரன், (ஆகிய மூவரும் ஆய்ந்தனர்.) பின்னர், நான்முகன், திருமால், உருத்திரன், இந்திரன் என்னும் நான்கு பெருந்தெய்வங்களின் பொறுப்பிலுள்ள நல்ல நகரங்கள் நிலைபெற்றுள்ள உலகத்தைக் காத்தல் தொழில் ஒன்றையே விரும்பும் கொள்கையுடைய பலராலும் புகழப்படும் நான்முகனை ஒழிந்த மற்றை மூவரும், தம்தம் தொழில்களை முன்னே போல இயற்றித் தலைவராதலை விரும்பினர்; பாதுகாப்பான இவ்வுலகில் வந்து தோன்றினர்; திருமாலின் திருவுந்தித் தாமரை பெற்ற குற்றமற்ற ஊழிகளையுடைய நான்முகனாகிய ஒருவனைப் பழைய நிலையிலே படைப்புத் தொழிலில் நிறுத்தக் கருதினர்.* (148 - 165)

கடுவோ டொடுங்கிய தூம்புடை வாலெயிற்று
அழலென உயிர்க்கும் அஞ்சுவரு கடுந்திறல்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்ளணி நீள்கொடிச் செல்வனும்; வெள்ளேறு
வலவயின் உயரிய பலர்புகழ் திணிதோள்
உமையமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்;
நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்து
ஈரிரண் டேந்திய மருப்பின் எழில்நடைத்
தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை
எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்;
நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய

உலகம் காக்கும் ஒன்றுபுரி கோள்கைப் ...
பலர்புகழ் மூவரும் தலைவ ராக
ஏமுறு ஞாலம் தன்னில் தோன்றித்
தாமரை பயந்த தாவில் ஊழி
165. நான்முக ஒருவற் சுட்டிக்

(கு - ரை.) 148. கடு - நஞ்சு; ஒடுங்கிய - மறைந்த; தூம்பு - உட்டுளை; வாலெயிறு - வெண்ணிறப் பல்; 150. புடைக்கும் - அடிக்கும்; கொடுஞ்சிறை - வளைந்த சிறகு; 152. வயின் - இடம்; 154. எயில் - மதில்; அவை, தங்கம் வெள்ளி இரும்பு என்பன; முரண் - வலிமை; 155. நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டம் - ஆயிரம் கண்; 156. கொற்றம் - வெற்றிப் பெருமை; 157. மருப்பு - தந்தம்; 159. எருத்தம் - பிடர்; 160. நாற்பெரும் தெய்வம் - நான்முகன், திருமால், உருத்திரன், இந்திரன் என்னும் நான்கு பெரிய தெய்வம்; 161. ஒன்றுபுரி கொள்கை - காக்கவேண்டும் என்னும் ஒன்றை விரும்பிய நோக்கம்; 162. மூவர் - நான்முகன் ஒழிந்த மூவர்; 163. ஏமுறு ஞாலம் - பாதுகாப்புடைய உலகம்; 164. தாமரை பயந்த - திருமாலின் உந்தித் தாமரை பெற்ற; தா இல் - அழிவில்லாத; 165. சுட்டி - குறித்து.

அவர்களும்,

அழகுண்டாகப் பகுத்துக் காணுங்கால் வேறுபடத் தோன்றியும் தம்முள் மாறுபாடில்லாத அறிவினையுடைய ஆதித்தர், உருத்திரர், வசுக்கள், மருத்துவர் என்னும் நான்காகிய இயல்பினையுடைய வேறுபட்ட முப்பத்து மூவரும், பதினெண் வகைத் தேவகணத்தினரும், விண்மீன் போன்ற தோற்றம் உடையவர்களாகவும், கடலில் இருந்து கிளம்பும் காற்றுப் போன்ற விரைந்த செலவினராகவும், காற்றொடு கூடி எழுந்த தீப்போன்ற வலியினராகவும், தீ உண்டாகும்படி இடி இடித்தாற் போன்ற குரலினை உடையவராகவும் தங்களுக்குள்ள குறைகளை நிறைவேற்றிக்கொள்ள வேண்டித் தம்மைக் குறையிரத்தற்காக விண் வழியாகச் சூழ்ந்து வந்து உடனே காணுமாறு, குற்றமற்ற கற்புடைய தேவயானையுடன் சிலநாள் திருவாவினன்குடியில் தங்குதலும் உரியன். (166 - 176)

... .... .... காண்வரப்
பகலில் தோன்றும் இகலில் காட்சி
நால்வே றியற்கைப் பதினொரு மூவரொடு
ஒன்பதிற் றிரட்டி உயர்நிலை பெறீஇயர்
மீன்பூத் தன்ன தோன்றலர்; மீன்சேர்பு
வளிகிளர்ந் தன்ன செலவினர் ; வளிஇடைத்
தீயெழுந் தன்ன திறலினர் ; தீப்பட
உருமிடித் தன்ன குரலினர் ; விழுமிய
உறுகுறை மருங்கில்தம் பெறுமுறை கொண்மார்
அந்தரக் கோட்பினர் வந்துடன் காணத்
தாவில் கொள்கை மடந்தையொடு சில்நாள்
ஆவி நன்குடி அசைதலும் உரியன்.

(கு - ரை.) *166. பகலில் - பகுத்துக் காணுதலில் ; இகல் இல் - மாறுபாடு இல்லாத ; 167. பதினொரு மூவர் - முப்பத்து மூவர் ; 168. ஒன்பதிற்று இரட்டி - பதினெண்மர் ; 169. தோன்றலர் - தோற்றத்தினர் ; 170. வளி - காற்று ; 171. திறல் - வலிமை ; 172. உரும் - இடி; விழுமிய - துயரமாயுள்ள; 174. கோட்பு - சுழற்சி, சூழ்ந்து; 175. தாஇல் - குற்றமில்லாத; 176. ஆவிநன்குடி - திருவாவிநன்குடி ; அசைதல் - தங்குதல்.*

*அதுவன்றியும் கேட்பாயாக :*

## ௪. திருவேரகம்

(உ - டை) *ஆறு வகையாக வகுக்கப்பட்ட கடமை முறைகளில் சிறிதும் தவறாதவர் ; தாய் தந்தையர் என்னும் இருவர் வழிமுறைகளும் மதிக்கப் பெற்றவர் ; பல்வேறு பழைமையான குடிகளில் பிறந்தவர் ; நாற்பத்து எட்டு ஆண்டு எனப்பெறும் நல்ல இளமைக் காலத்தையெல்லாம் கல்வியறிவு ஒழுக்கங்களிலே செலவிட்டவர்; அறநெறியில் பயின்ற கொள்கையர்; நாற்கோணம் முக்கோணம் வில் என மூன்று வகைப்படுத்தப்பட்ட வேள்விக் குண்டங்களில் வளர்க்கும் காட்டுத்தீ, வீட்டுத்தீ, ஞானத்தீ என்னும் மூவகைத் தீ வழிபாடு செய்யும் சிறப்பினர் ; உடற்*

பிறப்பு, அறிவுப் பிறப்பு என்னும் இருபிறப்புமுடைய அந்தணர்; இத்தகையவர், ஓதத்தக்க பொழுதறிந்து மறைகளை ஓதுவர். அவர்கள், ஒன்பது இழைகொண்ட மூன்று நுண்ணிய பூணூலை யுடையவர்; நீரில் மூழ்கி ஈர ஆடை உடலில் இடந்து உலருமாறு உடுத்தவர்; தலைமேல் கூப்பிய கையினர்; இறைவனைப் புகழ்ந்து 'சரவணபவ' என்னும் ஆறு எழுத்துக்களைக் கொண்ட அருமறை மொழியை ஆசிரியரிடம் கேட்டவாறே நாக்குப் புடைபெயர்ந் தொலிக்கும் அளவும் சிறக்கப் பாடுபவர்; மணமிக்க நறுமலர்களை ஏந்தி வழிபடுபவர்; இத்தகையவர்க்காகப் பெரிதும் மகிழ்ந்து திரு ஏரகத்தில் தங்குதலும் உரியன். (177 - 189)

அதாஅன்று,
இருமூன் றெய்திய இயல்பினின் வழாஅது
இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
அறுநான் கிரட்டி இளமை நல்லியாண்டு
ஆறினில் கழிப்பிய அறன்நவில் கொள்கை
மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்து
இருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல
ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர உடீஇ
உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து
ஆறெழுத் தடக்கிய அருமறைக் கேள்வி
நாவியல் மருங்கின் நவிலப் பாடி
விரையுறு நறுமலர் ஏந்திப் பெரிதுவந்து
ஏரகத் துறைதலும் உரியன் ;

(கு - ரை.) 177. இருமூன்றெய்திய இயல்பு - ஆறுவகையாக வகுக்கப்பட்ட முறைமை; அவை, ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன; 178. இருவர் - தாய் தந்தையர்; 179. அறுநான்கு இரட்டி-நாற்பத்தெட்டு; 180. ஆறு-ஒழுங்குமுறை; கழிப்பிய-கழித்த; 182. இருபிறப்பாளர் - அந்தணர்: நுவல - கூற; 183. மூன்றுபுரி நுண்ஞாண் - மூன்று புரிகளைக்கொண்ட நுண்ணிய நூல்வடம்; 184. காழகம் - உடை; உடீஇ - உடுத்தி; 185. தன் - முருகன்;

ஆறெழுத்து - 'சரவணபவ'; 187. நாஇயல் மருங்கில் - நாக்குப் பெயர்ந்தொலிக்கும் அளவில்; 188. விரை - மணம்; 189. ஏரகம் - திருவேரகம்.

அதுவன்றியும் கேட்பாயாக:

## ௫. குன்றுதோறாடல்

(உ-டை.) வெறியாடுபவன், பச்சிலைக் கொடியால் நறுமண முள்ள சாதிக்காயை இடையே இட்டுத் தொடுத்து, அழகிய தக்கோலக் காயையும் கலந்து, காட்டு மல்லிகையுடன் வெண் டாளியையும் இணைத்துக் கட்டிய கண்ணியை உடையவன்; அவன், நறுமணச் சந்தனம் பூசிய அழகிய மார்பினையுடையவரும், வளைதலைக் கொண்ட வலிய வில்லால் கொலை புரிதலைச் செய்பவரும் ஆகிய வேடர், நெடிய மூங்கிலில் இருந்து முதிர்ந்த தேனாற் செய்த கள்ளின் தெளிவை மலைநாட்டுச் சிற்றூரில் உள்ள தம் உறவினருடன் உண்டு மகிழ்ந்து மலைநிலத்துக்குரிய தொண்டகப் பறையின் தாளத்துக்குத் தக்கவாறு குரவைக் கூத்து ஆடுமிடத்துக் கலந்திருப்பான். (190 - 197)

அதாஅன்று
பைங்கொடி நறைக்காய் இடையிடுபு வேலன்
அம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண்கூ தாளம் தொடுத்த கண்ணியன்
நறுஞ்சாந் தணிந்த கேழ்கிளர் மார்பிற்
கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவர்
நீடமை விளைந்த தேக்கள் தேறல்
குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை அயர

(கு - ரை) 190. நறைக்காய்-சாதிக்காய்; 191. அம்பொதிப்புட்டில்- அழகினையுடைய தக்கோலக்காய்; அது புட்டில் போன்றது ஆகலின் அப்பெயர் பெற்றது; குளவி - காட்டு மல்லிகை; 192. வெண்கூதாளம்- வெண்டாளி; 193. சாந்து - சந்தனம்; கேழ்கிளர் - நிறம் விளங்கும்;

*194. கொடுந்தொழில் - வலிதல்; கொலைஇய - கொலைபுரியும்; 195. நீடு அமை - நெடிய மூங்கில்; தேக்கள் தேறல் - இனியகள் தெளிவு; 197. தொண்டகம் - குறிஞ்சி நிலப்பறை; குரவை அயர - குரவைக் கூத்து ஆட.*

(உ - டை) விரல் படுதலால் மலர்ந்த, வேறுபட்ட நறுமணத்தையுடைய ஆழ்ந்த சுனையில் பூத்த மலரால் புனையப் பட்டதும் வண்டுகள் விரும்புவதும் ஆகிய கண்ணியையும், இணைத்துக் கட்டப்பட்ட பிணையல் மாலையையும், சேர்த்துக் கட்டப்பட்ட கூந்தலையும் உடையவர் மலைநாட்டு மகளிர். அவர்கள் இலையை உச்சியில் அணிந்த கஞ்சங்குல்லையையும், இலையோடு கூடிய நறும்பூங்கொத்துகளையும், சிவந்த அடியைக் கொண்ட கடம்பின் வெண்ணிறப் பூங்கொத்துகளையும் இடை இடை இட்டு வைத்து வண்டு தேனுண்ணுமாறு தொடுத்த பெரிய குளிர்ந்த அழகிய தழையுடையை வேலைப்பாடுடைய மணிக்கோவைகளை அணிந்த அரையில் அசையும்படி உடுத்துவர்; மயிலைக் கண்டாற் போன்ற மெல்லிய நடையினராக விளங்குவர்; இத்தகைய மகளிரோடும் இணைந்து விளங்குவன் முருகன்.

அவன், ஆங்கெல்லாம் சிவந்த மேனியனாகவும், சிவந்த உடையினனாகவும், சிவந்த அடியைக் கொண்ட அசோகின் குளிர்ந்த தளிர் அசையும் செவிகளை உடையவனாகவும், கச்சை கட்டியவனாகவும், வீரக்கழல் அணிந்தவனாகவும், வெட்சி மாலை சூடியவனாகவும், குழலூதுபவனாகவும், கொம்பு ஊதுபவனாகவும், சிறிய பல இசைக்கருவிகளை இசைப்பவனாகவும், கிடாய் ஊர்தியினனாகவும், மயில் ஊர்தியினனாகவும், குற்றமற்ற சேவற் கொடியினனாகவும், நெடியனாகவும், வளையணிந்த தோளினனாகவும், யாழ் இசைத்தாற் போன்ற இனிய மொழி பேசும் மகளிர்கூட்டத்தொடு, சிறிய அரைக்கச்சை மேற்கொண்ட நறுமையான குளிர்ந்த அழகிய இடுப்பில், கட்டி நிலந்தொட அமைந்த ஆடையினனாகவும், முழவு போன்ற பெருமையுடைய கைகளால் பொருந்தத் தாங்கி மெல்லிய தோளையுடைய பெண்மான் போலும் மகளிர் பலரைத் தழுவிக்கொண்டு அவர்களுக்குத் தக்க இருக்கை தந்து மலைகள்தோறும் சென்று விளையாடுவன். இஃது அவன் இயல்பாகும். (198 - 217)

விரலுளர்ப் பவிழ்ந்த வேறுபடு நறுங்கான்
குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி
இணைத்த கோதை அணைத்த கூந்தல்
முடித்த குல்லை இலையுடை நறும்பூச்
செங்கால் மராஅத்த வாலிணர் இடையிடுபு
சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை
திருந்துகாழ் அல்குல் திளைப்ப உடீஇ
மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு
செய்யன் சிவந்த ஆடையன் செவ்வரைச்
செயலைத் தண்டளிர் துயல்வரும் காதினன்
கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் இயத்தன்
தகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்
கொடியன் நெடியன் தொடியணி தோளன்
நரம்பார்த் தன்ன இன்குரல் தொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயல்
மருங்கில் கட்டிய நிலனேர்பு துகிலினன்
முழவுறழ் தடக்கையின் இயல ஏந்தி
மென்தோள் பல்பிணை தழீஇத் தலைத்தந்து
குன்றுதொ ருடலும் நின்றதன் பண்பே;

(கு - ரை.) *198. உளர்ப்பு-அசைப்பு; கான்-மணம்; 199. குண்டு சுனை - ஆழ்ந்த சுனை; 200. கோதை - மாலை; அணைத்த - சேர்த்துக் கட்டிய; 201. குல்லை - கஞ்சங் குல்லைப்புல்; 202. மராஅம் - கடம்பு; வால் இணர்-வெண்ணிறப் பூங்கொத்து; 203. சுரும்பு - வண்டு; 204. காழ் - வடம்; 206. அரை - அடிமரம்; 207. செயலை - அசோகு; 208. செச்சை - வெட்சி; 209. கோட்டன் - ஊது கொம்பினையுடையவன்; பல் இயத்தன் - பல இசைக் கருவிகளை இசைப்பவன்; 210. தகர் - கிடாய்; மஞ்ஞை - மயில்; புகரில் - குற்றமில்லாத; 212 நரம்பு - யாழ்; ஆர்த்தன்ன - இசைத்தாற்போன்ற; 213. குறும்பொறி - அரைக்கச்சை (உதரபந்தனம்); 214. மருங்கு - இடுப்பு; 215. முழவு உறழ் - மத்தளம் போன்ற; 216. பிணை - பெண்மான் போலும் மகளிர்; தலைத்தந்து - இருக்கை தந்து.*

*அதுவன்றியும் கேட்பாயாக:*

## ௬. பழமுதிர் சோலை

(உ - நடை.) சிறிய தினை அரிசியைப் பூக்களோடு கலந்து வைத்து, ஆட்டுக்குட்டியைப் பலியிட்டுக் கோழிக் கொடியைப் பக்கமாக நிறுத்தி ஊர்தோறும் ஊர்தோறும் எடுக்கப்பட்ட சிறப்புடைய விழாக்களிலும் முருகன் எழுந்தருள்வான்; அன்றியும் அன்புடையார் கூடி வாழ்த்தும் விரும்பத்தக்க இடங்களிலும் தோன்றுவான்; மேலும், வெறியாடுபவன நடத்தும் வெறியாடும் களங்களிலும், காட்டிலும், சோலையிலும், அழகிய ஆற்றின் நடுவே அமைந்த திட்டுகளிலும், ஆறுகளிலும், குளங்களிலும் வேறுபல அமைந்த இடங்களிலும், நாற்சந்திகளிலும், முச்சந்தி முதலிய சந்திகளிலும், புதிய பூக்களையுடைய கடம்பமர நிழலிலும், ஊர்ப் பொதுமன்றங்களிலும், அம்பலங்களிலும், தூண் வடிவாக வழிபாட்டுக்கு நிறுத்தப்பட்ட இடங்களிலும் திருமுருகன் எழுந்தருள்வான. (218 - 226)

அதாஅன்று,
சிறுதினை மலரோடு விரைஇ மறியறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ
ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும்
ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும்
வேலன் தைஇய வெறியயர் களனும்
காடும் காவும் கவின்பெறு துருத்தியும்
யாறும் குளனும் வேறுபல் வைப்பும்
சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்
மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்

(கு - ரை.) 218. விரைஇ - கலந்து; மறி - ஆட்டுக்குட்டி; 219. வாரணம் - கோழி; வயின் - பக்கம்; நிறீஇ - நிறுத்தி; 221. ஆர்வலர் - அன்பர்; மேவருநிலை - விரும்பத்தக்க இடம்; 222. தைஇய - அமைத்த; வெறியயர்களன் - வெறியாட்டு நடத்தும் இடம். 223. கா - சோலை; துருத்தி - ஆற்றிடைக்குறை; 224. வைப்பு - இடம். 225. சதுக்கம் - நாற்சந்தி; சந்தி - முச்சந்தி முதலியன; 226. பொதியில் - பொது மன்றம்; கந்து - கட்டுத்தறி, தூண்.

(உ - ரை.) இன்னும், பெருமைமிக்க தலைமையமைந்த கோழிக் கொடி எடுத்து அமைவுறச் செய்து, நெய்யும் வெண் சிறுகடுகும் நெற்றியில் அப்பி, ஓதும் மந்திரத்தை மெல்லென ஓதி வழிபட்டு அழகிய மலர்களை அடியார் தூவுவர்.

அவர்கள் வெவ்வேறான நிறமுடைய இரண்டு உடைகளை உடுத்துக்கொண்டு, சிவந்த நூலால் கையில் காப்புக் கட்டி, வெண் பொரி சிதறி, மிகுந்த வலிமை வாய்ந்த பெரிய காலையுடைய கொழுத்த ஆட்டுக்கிடாவின் இரத்தத்துடன் பிசைந்த தூய வெள்ளை அரிசியைச் சிறுபலியாக இட்டுப் பலவகைப் படையல்களையும் படைப்பர்.

சிறிய பச்சை மஞ்சளுடன் நறுமணம் வாய்ந்த சந்தனக் குழம்பைத் தெளிப்பர்; பெரிய குளிர்ந்த செவ்வலரி மாலையினையும் மற்றும் குளிர்ந்த நறுமணமாலைகளையும் இணை இணையாக அறுத்துத் தாழ அசையுமாறு தொங்கவிடுவர்; செறிந்த மலைப்பக்கத்திலுள்ள நல்ல ஊர்கள் (பசியும் பிணியும் பகையும் நீங்கி) வாழ்க என்று வாழ்த்துவர்; நறுமணப் புகை எடுப்பர்; குறிஞ்சிப்பண் பாடுவர். (227 - 239)

மாண்தலைக் கொடியொடும் மண்ணி அமைவர
நெய்யோடு ஐயவி அப்பி ஐதுரைத்துக்
குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி
முரண்கொள் உருவின் இரண்டுடன் உடீஇச்
செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாள் கொழுவிடைக்
குருதியொடு விரைஇய தூவெள் அரிசி
சில்பலிச் செய்து பல்பிரப் பிரீஇச்
சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்
பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணையுற அறுத்துத் தூங்க நாற்றி
நளிமலைச் சிலம்பின் நல்நகர் வாழ்த்தி
நறும்புகை எடுத்துக் குறிஞ்சி பாடி

(கு-ரை.) 227. அமைவர மண்ணி-அமைவுறச் செய்து; 228. ஐயவி-சிறுகடுகு; ஐது உரைத்து - மெல்லெனச் சொல்லி; 229. குடந்தம் - வழிபாடு; 230. முரண்கொள் உரு - மாறுபட்ட நிறம்; 232. மதவலி - மிகுந்த வலிமை; மாத்தாள் - பெரிய கால்; கொழுவிடை - கொழுத்த கிடாய்; 234. சில்பலி - சிறுபலி; பல்பிரப்பு இரீஇ - பலவகைப் படையல்களை வைத்து; இதனை, மரக்காலில் அரிசியை இட்டுப் பரப்பி வைத்தல் என்பர்; 235. நறுவிரை-நறிய சந்தனக் குழம்பு. 236. கணவீரம்-செவ்வலரி; 237. துணையுற அறுத்து-இணை இணையாக அளந்து அறுத்து; நாற்றி - தொங்கவிட்டு; 238. நளிமலை - குளிர்ந்த மலை; சிலம்பு - மலை; 239. நறும்புகை - மணப்புகை;

(உ-டை.) மேலும், முழங்கும் அருவி ஒலியுடன், இனிய இசைக்கருவிகளும் இணைந்து ஒலிக்கும்; சிவந்த மலர்களைத் தூவுவர்; கண்டார்க்கு அச்சம் உண்டாகக் குருதி கலந்த சிவந்த தினையைப் பரப்புவர்; குறக்குடிப் பிறந்த பெண்மகள் முருகன் விரும்பும் இன்னிசைக் கருவிகளை ஒலிக்கச் செய்வள்; இறைவன் உண்மையை மறுப்பாரும் அஞ்சுமாறு முருகன் வெளிப்பட்டுத் தோன்ற வழிப்படுத்துவர்; இத்தகைய அச்சம் பொருந்திய பெரிய நகரில் வெறியெடுக்கும் களங்களின் ஆரவாரம் பெருகும்; அதற்கு ஏற்பப் பாடியும், ஊது கொம்புகள் பலவற்றை நன்றாக ஊதியும் வளைந்த மணியை அசைத்தும் புறங்காட்டாத வலிமை மிக்கதும் பிணிமுகம் என்னும் பெயருடையதும் ஆகிய யானையை வாழ்த்தியும் வேண்டுவார் வேண்டுவனவற்றை எல்லாம் விரும்பிப் பெறுமாறு வழிபடுவர்; மேற்கூறிய அவ்வவ் விடங்களிலெல்லாம் முருகன் தங்குதல் உரியன் என்பது யான் அறிந்த வழியேயாம்.
(240 - 249)

இமிழ்இசை அருவியோடு இன்னியம் கறங்க
உருவப் பல்பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள்
முருகியம் நிறுத்து முரணினர் உட்க
முருகாற்றுப் படுத்த உருகெழு வியனகர்
ஆடுகளம் சிலம்பப் பாடிப் பலவுடன்
கோடுவாய் வைத்துக் கோடுமணி இயக்கி

ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி
வேண்டுநர் வேண்டியாங் கெய்தினர் வழிபட
ஆண்டாண் டுறைதலும் அறிந்த ஆறே.

(கு - ரை.) 240. இமிழ் இசை-முழங்கும் ஒலி; இன்னியம் கறங்க-இனிய இசைக்கருவி ஒலிக்க; 241. உருவம் - நிறம்; தூஉய் - தூவி; வெருவர - அச்சமுண்டாக; 243. முருகியம் - முருகன் விரும்பும் இசைக்கருவி; முரணினர் - மாறுபட்டோர்; உட்க - அஞ்ச; 244. முருகாற்றுப்படுத்த - முருகனை வெளிப்படுத்திய; வியனகர் - பெரிய நகர்; 245. சிலம்ப - ஒலியெழ; 246. கோடு - கொம்பு; கொடுமணி - வளைந்த மணி; 247. ஓடாப்பூட்கை - புறங்காட்டாத வலிமை; பிணிமுகம் - பெயர்; 249. ஆண்டாண்டு - அங்கங்கு; ஆறு - வழி.

(உ - ரை.) யான் முன்னே சொல்லிய இடங்களில் ஆயினும் ஆக; மற்றை இடங்களில் ஆயினும் ஆக; காணும் தகுதியுடன் நீ அப் பெருமானைக் கண்முன் காணும்போது முகத்தால் விரும்பி நோக்குக; வாயால் வாழ்த்துக; கையைத் தலைமேல் வைத்துக் கூப்பிப் புகழ்க; அவன் திருவடிகளில் நின் தலைபடியுமாறு வீழ்ந்து வணங்குக.

"நெடிய பெரிய இமயமலையின் உச்சியில் பளிக்குப்போன்ற நீர் நிறைந்த வளமான பொய்கையில் வான், வளி, தீ, நீர், நிலம் என்னும் ஐந்து பூதங்களுள் ஒன்றாகிய தீ தன் கைகளிலே தாங்கக் கார்த்திகைப் பெண்கள் அறுவரால் பெறப்பட்ட ஆறுவடிவு பொருந்திய செல்வனே, கல்லாலின் கீழ் அமர்ந்த கடவுளின் புதல்வனே, பெரிய மூங்கிலையுடைய இமவான் மகளாகிய உமையம்மையின் மகனே, பகைவர்க்குக் கூற்றுவனே, போரில் பெறும் வெற்றியையுடைய கொற்றவையாகிய போர்த்தெய்வத்தின் மகனே, அணிகலம் அணிந்த சிறப்புடைய காளியின் குழந்தையே, தேவர்கள் வணங்கும் விற்படைத் தலைவனே, கடம்புமாலை அணிந்த மார்பனே, எல்லா நூல்களையும் அறிந்த புலவனே, போர்த் தொழிலில் ஒப்பற்றவனே, போர் செய்யும் வெற்றிப்பேறுடைய இளைஞனே, அந்தணர்களுக்குச் செல்வமாக அமைந்தவனே, அறிவாளர் புகழ்ந்து சொல்லும் புகழ் மலையாகத் திகழ்பவனே,

தெய்வயானைக்கும் வள்ளியம்மைக்கும் கணவனே, ஆடவருள் அரியேறு போன்றவனே, வேலைத் தாங்கிய பெருமையுடைய நிறை பெருஞ் செல்வனே, குருகு (கிரௌஞ்சம்) என்னும் பெயருடைய மலையைப் பிளந்து அழித்த குறையாத வெற்றியை யுடையவனாகவும் நெடிய மலைகளுக்கு உரிமையாளனே, பலரும் புகழ்ந்து கூறும் நன்மொழித் திறம்வாய்ந்த புலவர் தலைவனே, அரிதிற் பெறும் முறைமையுடைய பெருமை வாய்ந்த முருகனே, விரும்பியவர்க்கு அவர் விரும்பியதை அளிக்கும் பெரும் புகழாளனே, இன்னலுற்று வந்தவர்க்கு அருள் செய்யும் அழகிய அணிகலம் அணிந்த சேயோனே, நெருங்கிய போரில் வெற்றிபெற்று விளங்கும் ஒளி மிக்க மார்பால், பரிசு வேண்டி வந்தாரைத் தழுவி வேண்டுவன அருளும் ஒளியமைந்த உயர்ந்த வண்மையாளனே, மேம்பட்டாரெல்லாம் வாழ்த்தும் புகழ்வாய்ந்த பெயரை யுடைய இறைவனே, சூரபன்மனைச் சார்ந்தோரையெல்லாம் அழித்த வலிமையமைந்த பெருவல்லாளனே, போர்த்தொழில் வல்ல வீரனே, தலைவனே, என்று பலவற்றையும் யான் அறிந்த அளவில் புகழ்ந்து முடியாமல் நின் தன்மைகளையெல்லாம் முற்ற அளந்தறிதல் நிலைபெற்ற உயிர்களுக்கு இயலாதது. ஆதலால் நின் திருவடியைப் பெற நினைந்து வந்தேன். நின்னோடு ஒப்பானவர் இல்லாத அறிவாளனே" என்று நீ கருதிவந்ததை வேண்டிக் கொள்ளுமுன்னரே, பல்வேறு வடிவுடைய குறுகிய பல பணியாளர் விழாக்கொள்ளும் இடத்தில் பொலிவாகத் தோன்றி, "இம் முதிய இரவலன் இரங்கத் தக்கவன்; நின் வளமான புகழை விரும்பி வந்துள்ளான்; கேட்டோர்க்கு இன்பமும் உறுதியும் தரக் கூடியவையாகிய பலவற்றையும் வாழ்த்தி" என்று கூறுவர். (250-286)

ஆண்டாண் டாயினும் ஆகக் காண்டக
முந்துநீ கண்டுழி முகனமர்ந் தேத்திக்
கைதொழூஉப் பரவிக் காலுற வணங்கி
நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை
ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப
அறுவர் பயந்த ஆறமர் செல்வ

ஆல்கெழு கடவுள் புதல்வ மால்வரை
மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ
இழையணி சிறப்பிற் பழையோள் குழவி
வானோர் வணங்குவில் தானைத் தலைவ
மாலை மார்ப நூலறி புலவ
செருவில் ஒருவ பொருவிறல் மள்ள
அந்தணர் வெறுக்கை அறிந்தோர் சொன்மலை
மங்கையர் கணவ மைந்தர் ஏறே
வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ
குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ
பலர்புகழ் நன்மொழிப் புலவர் ஏறே
அரும்பெறல் மரபின் பெரும்பெயர் முருக
நசையுநர்க் கார்த்தும் இசைபே ராள
அலந்தோர்க் களிக்கும் பொலம்பூண் சேஎய்
மண்டமர் கடந்தநின் வென்றா டகலத்துப்
பரிசிலர்த் தாங்கும் உருகெழு நெடுவேஎள்
பெரியோர் ஏத்தும் பெரும்பெயர் இயவுள்
சூர்மருங்கு அறுத்த மொய்ம்பின் மதவலி
போர்மிகு பொருந குரிசில் எனப்பல
யானறி அளவையின் ஏத்தி ஆனாது
நின்னளந் தறிதல் மன்னுயிர்க் கருமையின்
நின்னடி உள்ளி வந்தனென் நின்னொடு
புரையுநர் இல்லாப் புலமை யோய்எனக்
குறித்தது மொழியா அளவையிற் குறித்துடன்
வேறுபல் உருவிற் குறும்பல் கூளியர்
சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி
“அளியன் தானே முதுவாய் இரவலன்

285. வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்'' தென
இனியவும் நல்லவும் நனிபல ஏத்தித்

(கு - ரை.) 250. காண்தக - காணுமாறு; 251. கண்டுழி - காணும்போது; அமர்ந்து - மலர்ந்து; ஏத்தி - வாழ்த்தி; 252. பரவி - புகழ்ந்து; 253. சிமையம் - உச்சி; 254. ஐவர் - ஐம்பூதங்கள்; ஒருவன் : தீ; அங்கை - உள்ளங்கை; 255. அறுவர் - கார்த்திகைப் பெண்கள் அறுவர்; அருந்ததி ஒழிந்த அறுவர் எனவும் கூறுவர்; பயந்த - பெற்ற; ஆறுஅமர் - ஆறு உருவாக அமைந்த; 256. ஆல்கெழு-கல்லாலமரத்தின் கீழ் அமர்ந்த; மால்வரை - பெரிய மலை (இமயமலை). 257. மலைமகள் - உமையம்மை; மாற்றோர் - பகைவர்; 258. கொற்றவை - வெற்றித் தெய்வம்; 259. இழை - அணிகலம்; பழையோள் - காளி; 260. தானை - படை; 262. செரு - போர்; ஒருவ - ஒப்பற்றவனே; மள்ள - இளைய; 263. வெறுக்கை-செல்வம்; சொல்மலை-புகழ்மலை; 264. மங்கையர் - தெய்வயானையும், வள்ளியும்; ஏறு - சிங்கம்; 266. குன்றம் - குருகு என்னும் பெயருடைய கிரௌஞ்சம்; குன்று - குறையாத; 267. விண் பொரு - வானைத்தொடும்; கிழவ - உரிமையாள; 269. மரபு - முறைமை; 270. நசையுநர் - விரும்பியவர்; ஆர்த்தும் - நுகர்தற்கு அருளும்; 271. அலந்தோர் - துன்புற்றோர்; பொலம் பூண் - பொன் அணிகலம்; 272. மண்டமர் - நெருங்கிய போர்; அகலம் - மார்பு; 274. இயவுள் - கடவுள்; 275. சூர் - சூரபன்மன்; மதவலி - பெருவலி, பெயருமாம்; 276. குருசில் - தலைவன்; 277. ஆனாது - முடியாது; 278. மன்உயிர் - நிலைபெற்ற உயிர், மக்களுயிர்; 279. உள்ளி - நினைத்து; 280. புரையுநர் - ஒப்பானவர்; 282. கூளியர் - பூத கணங்களாகிய பணியாளர்; 283. சாறுஅயர் - விழாக் கொள்ளும்; வீறுபெற - பொலிவுபெற; 284. அளியன் - இரங்கத்தக்கவன்; முதுவாய் - முதுமையும் வாய்மையும்; 285. நயந்து - விரும்பி;

(உ - டை.) அவ்வளவில், தெய்வத்தன்மை வாய்ந்த வலிமையான வடிவத்தையும், வானத்தைத் தொடும் வளர்த்தியினையும் உடைய முருகன் உனக்கு முன்னர்த் தோன்றி, வருத்துதல் அமைந்த தன் தெய்வ ஒளியை அடக்கிக்கொண்டு, பழைமையான தனது மணங்கமழ்கின்ற தெய்வநலங்கனிந்த இளமையான திருவடிவைக் காட்டுவான்; 'அஞ்சாது கொள்க நீ; வீடுபேற்றை நினைத்துவந்த நின் நினைவை நான் அறிவேன்' என்று அன்பான நன்மொழிகளைக் கலந்துரைப்படன். கருநிறமுடைய கடலால் சூழப்

பட்ட இவ்வுலகில் நீ கேடு இல்லாமல் ஒப்பற்ற ஒருவனாகத் தோன்றுமாறு சிறந்த பெறுதற்கரிய பரிசை வழங்குவன்.

(287 - 295)

தெய்வம் சான்ற திறல்விளங் குருவின்
வான்தோய் நிவப்பின் தான்வந் தெய்தி
அணங்குசால் உயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி
அஞ்சல் ஓம்புமதி அறிவன்நின் வரவென
அன்புடை நன்மொழி அளைஇ விளிவின்று
இருள்நிற முந்நீர் வளைஇய உலகத்து
ஒருநீ யாகித் தோன்ற விழுமிய
பெறலரும் பரிசில் நல்குமதி பலவுடன்

(கு - ரை.) 287. சான்ற - அமைந்த, வாய்ந்த; திறல் - வலிமை; 288. நிவப்பு - வளர்ச்சி, உயரம்; 289. அணங்கு சால் உயர்நிலை - வருத்துதல் அமைந்த உயர்ந்த ஒளிநிலை; தழீஇ - அடக்கி அமைத்து; 290. இளநலம் - இளமையான நல்ல வடிவம்; 291. அஞ்சல் ஓம்புமதி - அஞ்சாதே கொள்க; 292. அளைஇ - கலந்து; விளிவு இன்று - கேடு இல்லாமல்; 293. இருள் நிறம் - கருநிறம்; முந்நீர் - கடல்; 295. பெறலரும் - பெறுதற்கு அரிய; நல்குமதி - நல்கும்;

அவன் யாவன் எனிற் கூறுவன்.

(உ - ரை.) வேறுபட்ட பல துகிற் கொடிகளைப்போல அசைந்து அகிற்கட்டைகளைச் சுமந்து, சந்தனமரத்தை உருட்டி, சிறுமூங்கிலின் பூவுடைய அசையும் கிளைமுரிய வேரைப் பிளந்து, விண்ணைத்தொடும் பெரிய மலையில் ஞாயிற்றைப்போலத் தொடுத்து வைக்கப்பட்ட தேன்கூட்டைச் சிதைத்து, நல்ல பல ஈரப்பலாவின் முற்றிய சுளை தன்னொடு கலக்கப்பண்ணி, மலைமேல் உள்ள சுரபுன்னையின் நறுமலரை உதிர்த்து, கருங்குரங்குடன் கரிய முகத்தையுடைய ஆண்முசுக்குரங்கை நடுங்கச்செய்து, புள்ளிகளையுடைய முகத்தைக்கொண்ட பெரிய பெண்யானை குளிரும்படி வீசி, பெரிய யானையின் முத்துடைய வெண்கொம்புகளை அள்ளி, தாவி

விழுந்து நல்லபொன்னும் மணியும் மேலும் நிறம் விளங்குமாறு செய்து, பொன்னைத் தெள்ளிக் கொழித்து. வாழையின் அடி முரியவும், தென்னையின் இளநீர்க்குலை உதிரவும் மோதித் தாக்கி, மிளகுக் கொடியின் கரிய கொத்துகளைச் சாய்த்து, தோகைகளையுடைய புறத்தையும் மெல்லிய நடையையும் உடைய மயில்கள் பலவற்றுடன் பெட்டைக் கோழிகள் அஞ்சி அழிந்தோடச் செய்து, ஆண்பன்றியுடன், உள்ளே சோறுடைய கரிய பனையின் புல்லிய செறும்புபோன்ற நிறமுடைய கருமயிரைக் கொண்ட உடலையும், வளைந்த அடியையும் உடைய கரடி பெரிய கற்பாறை வெடிப்பாகிய குகையுள் ஒடுங்க, கரிய கொம்பினையுடைய காட்டுப் பசுவின் காளை முழக்கம் செய்ய, மலையின் உச்சியில் இருந்து 'இழும்' என்னும் ஒலியெழ ஒழுகும் அருவியையுடைய பழம் முதிர்ந்த சோலைகளையுடைய மலைக்கு உரிமையாளனாகிய முருகப்பெருமான். (296-317)

வேறுபல் துகிலின் நுடங்கி அகில்சுமந்து
ஆர முழுமுதல் உருட்டி வேரல்
பூவுடை அலங்குசினை புலம்பவேர் கீண்டு
விண்பொரு நெடுவரைப் பரிதியில் தொடுத்த
தண்கமழ் அலர்இறால் சிதைய நன்பல
ஆசினி முதுசுளை கலாவ மீமிசை
நாக நறுமலர் உதிர யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுதல்
இரும்பிடி குளிர்ப்ப வீசிப் பெருங்களிற்று
முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று
நன்பொன் மணிநிறங் கிளரப்பொன் கொழியா
வாழை முழுமுதல் துமியத் தாழை
இளநீர் விழுக்குலை உதிரத் தாக்கிக்
கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை இரியக் கேழலொடு

இரும்பனை வெளிற்றின் புன்சாய் அன்ன
குரூஉமயிர் யாக்கைக் குடாவடி உளியம்
பெருங்கல் விடரளைச் செறியக் கருங்கோட்டு
ஆமா நல்லேறு சிலைப்பச் சேண்நின்று
இழுமென இழிதரும் அருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே.

(கு - ரை.) 296. துகில்-ஆடை, இவண் கொடியைக் குறித்தது; நுடங்கி - அசைந்து; 297. ஆரம் - சந்தனம்; முழுமுதல் - அடிமரம்; வேரல் - மூங்கில்; 298. அலங்குசினை - அசையும் கிளை; புலம்ப - தனிமையாக; கீண்டு - கிழித்து; 299. பரிதி - கதிரோன்; 300. அலர் இறால் - விரிந்த தேன்கூடு; 301. ஆசினி - ஈரப்பலா; கலாவ - கலக்க; மீமிசை - உச்சி; 302. நாகம் - சுரபுன்னை; ஊகம்- கருங்குரங்கு; 303. மாமுக முசுக்கலை - கரிய முகத்தையுடைய முசுக்குரங்கு; பனிப்ப - நடுங்க; நுதல் - நெற்றி; 304 இரும்பிடி- கரிய பெண்யானை; 305. வான்கோடு - வெண்தந்தம்; 306. கொழியா - கொழித்து, வீசி; 307 துமிய-துணிய; தாழை- தென்னை; 308. விழுக்குலை - சிறந்த குலை; 309. கறிக்கொடி, மிளகுக் கொடி; கருந்துணர் - கருநிறப்பூங்கொத்து; பொறி-புள்ளி- தோகை 310. மஞ்ஞை - மயில்; வெரீஇ - அஞ்சி; 311. வயப் பெடை - வலிய பெட்டை; இரிய - அகன்று ஓட; கேழல் - காட்டுப் பன்றி; 312. இரும்பனை - கரியபனை; வெளிறு-சோறு; புன்சாய்- புல்லிய செதும்பு; 313. குரூஉ - நிறம்; குடாவடி - வளைந்த அடி; உளியம் - கரடி; 314. விடர் அளை - வெடிப்பில் அமைந்த குகை; 315. ஆமா - காட்டுப்பசு; ஏறு - ஆண்; சிலைப்ப - ஒலிக்க; 317. பழமுதிர் சோலை - பழம் உதிர் சோலை; பழமுதிர்சோலை; மலைகிழவோன் - மலைக்கு உரிமையாளன்; முருகன்.

## முடிபு

(உ - ரை.) "கணவன் மார்பினன் சென்னியுறைஇய சேஎயின் சேவடி படரும் உள்ளமொடு செல்லும் செலவை நீ நயந்தனை யாயின், நெஞ்சத்து இன்னசை வாய்ப்ப இன்னே பெறுதி நீ முன்னிய வினை; அவன் குன்றமர்ந்துறைதலும் உரியன்; அதாஅன்று, அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பு; அதாஅன்று, குன்றுதோறாடலும் நின்றதன் பண்பு; அதாஅன்று, விழவின் கண்ணும் நிலையின் கண்ணும் கந்துடை நிலையினும் களன் காடு முதலியவற்றினும் உறைதலும் உரியன்; இது யான்

அறிந்தபடியே கூறினேன்; யான் கூறிய இடங்களிலாதல் வேறிடங்களிலாதல் அவனை முந்து நீ கண்டுழி ஏத்திப் பரவி வணங்கி யானறி அளவையின் ஏத்தி நின்னடி உள்ளி வந்தேன் என்று நீ குறித்தது மொழியா அளவை, கூளியர் தோன்றிப், பெரும அளியன் இரவலன் ஏத்தி வந்தோன் எனக்கூற அவனும் தானே வந்தெய்தி தழீஇக் காட்டி அஞ்சலோம்பென்று நன்மொழி அளைஇ ஒருநீயாகித் தோன்றும்படி பரிசில் நல்கும்; அவன்யாவன் எனில் பழமுதிர்சோலை மலைகிழவோன்''

வேலும் மயிலும் துணை.

———

